உ

கடவுள் துணை.

# நளன் தூது




சென்னை

சிந்தாத்திரிப்பேட்டை

ஸ்ரீமுக மார்கழி] [அணா 2

உ

கடவுள் துணை.

அதிவீரராமபாண்டியன்

இயற்றிய

நைடதத்தின் ஒரு பகுதியான

# நளன் தூது



சென்னை

சிந்தாத்திரிப்பேட்டை

லோகோபகாரி நிலயம்

ஸ்ரீமுகவருஷ மார்கழிமீ

[இரண்டணா.

## கடவுள் வணக்கம்

---

தழைவிரி கடுக்கை மாலைத்
　　தனிமுதல் சடையில் சூடும்
குழவிவெண் டிங்கள் இற்ற
　　கோட்டது குறையென் றெண்ணிப்
புழைநெடுங் கரத்தாற் பற்றிப்
　　பொற்புற இணைத்து நோக்கும்
மழைமதக் களிற்றின் செய்ய
　　மலரடி சென்னி வைப்பாம்.

# நளன் தூது

## இந்திரன் முதலிய நால்வர் பொருட்டுத் தமயந்தியிடம் நளன் தூது சென்றமை

(கலி விருத்தம்)

1. அண்டருலகத்திறைவன் அவ்வுழி யிருப்ப
மண்டு புனல் வாளைவளர் பூகமடல் கீறும்
தண்டலை உடுத்தநிட தம்தனி புரக்கும்
ஒண்டிறல் உடைக் குரிசில் செய்திறம் உரைப்பாம்.

2. அன்ன முரை செய்த எழில் ஆயிழையை நெஞ்சத்து
உன்னி அயர் வோடும் உயிர் உண்டிலைகொ லென்னக்
கன்னன் மதன் ஐங்கணை கருத்திடை குளிப்ப
மன்னவர்கள் மன்னன்மதி மாழ்கி அயர் காலை.

3. பூகமடல் கிறியிள வாளைபுனல் காலும்
மேகமிசை தாவிடும் விதர்ப்பநகர் மன்னன்
ஓகையொ டளித்தஉயிர் ஓவிய நிகர்க்கும்
தோகையமண ஓலைகொடு தூதுவர் அடைந்தார்.

4. முடங்கலின் வரைந்தவுரை முற்று முண ராமுன்
தடப்புயம் வளர்ந்தன வரைக்குவமை சாலக்
குடங்கையின் அகன்ற விழி கோநகரி செல்வான்
மடங்கலனை யானுள மகிழ்ச்சியொ டெழுந்தான்.

5. கொய்யுளை வயப்புரவி கோடியுழை போத
மையல்மத வாரணம் மருங்குற நெருங்க
வெய்யதிறல் வாளுழவர் வேலை புடை சூழ
மொய்திரை அளக்கரின் இயம்பல முழங்க.

6. விரிகதிர் எறிக்குமதி வெண்குடை நிழற்றத்
தரள நகை மாதர் பலர் சாமரை இரட்ட
எரிமணி இமைக்கு முடி மன்னவர் இறைஞ்சத்
திருவளரு மார்பன் உயர் தேரின்மிசை போனான்.

7. தேர்நடவு கம்பலை செவிப்புகுத லோடும்
வார்கடல் முழக்கொலி கொலோமழை முழக்கோ
சார்வதென ஐயமுறும் வானவர்கள் தம்முள்
நேர் கெழுமு மாட நிட தத்திறை எதிர்ந்தான்.

(வேறு)

8. பொற்றடப் தேர்மிசைப் பொலிந்து தோன்றிய
மற்றடம் தோளினான் வனப்பு நோக்கினார்
உற்றதோர் வியப்பினுக் குள்ளம் ஈந்து தாம்
வெற்றுடம் பாயினர் விண்ணுளோ ரெலாம்.

இந்திரன் கூற்று.

9. மாயிரு ஞாலத்து வந்து மன்னர் கோன்
ஏயபே ரழகுகண் டிமைப்பி னட்டமோர்
ஆயிரம் பெற்றபே றடைந்து ளேனெனச்
சேயுயர் விசும்பினுக் கிறைவன் செப்பினான்.

வருணன் கூற்று.

10. மண்டமர் கடந்தவேல் மன்னர் மன்னனைக்
கண்டுமற் றொருவர் தோள் காமுற் றீர்ந்தொடை
தொண்டைவாய் மடமயில் சூட்டு மோவெனத்
தெண்டிரைக் கனைகடற் செல்வன் கூறினான்.

அக்கினி கூற்று.

11. பாந்தள் மேல் கிடந்தபார் பரிக்கும் திண்திறல்
வேந்தனுக் கேதொடை வேய்ந்தி லாளெனில்
ஏந்திழை எழில்நலம் என்கொ லாமெனக்
காந்து வெங் கதழெரிக் கடவுள் சாற்றினன்.

எமன் கூற்று.

12. கழைசுளி புகர்முகக் களிநல் யானையான்
இழைசுடர் எறிப்பவந் திறுத்த தேந்திழை
விழவினுக் காயின்யாம் மீண்டு போதலே
அழகிதென் றந்தகன் அறைந்திட் டானரோ.

இந்திரன் கூற்று.

13. போர்த்தொழில் வயிரவாட் பொருவில் அண்ணல்
தார்ப்பசுங் கிளியனாள் தார்பெ றுதுபோய்க் [செம்
கார்க்குழல் அரம்பையர் கமல வாள்முகம்
பார்ப்பதெவ் வாறெனப் பரிவிற் கூறினன்.

14. அரத்தமுண் டொளிரும் வாள் அவுணர் செற்று நம்
திருத்தகு செல்வமும் சிறப்பும் நல்கிய
விரைத்துணர் அலங்கலான் வீர சேனன் போன்(று)
இருத்தலால் இவன் நளன் என்ன வேண்டு மால்.

15. சேற்றிதழ்த் தாமரை மலரத் தெண்கடல்
தோற்று செங் கதிரெனத் தோன்று நின்னையாம்
ஏற்ற நல் ஓரையில் எழுந்த தாலன்றே
ஆற்றெதிர்ப் பட்டனம் அலங்கல் வேலினாய்.

16. இவன் அழற் கடவுள், மற் றிவன் வெங்கூற்றுவன்,
உவன் எறி கடற்கிறை, ஒழிந்து நின்றயான்
கவனவாம் பரியுளம் உணருங் காவல
அவிரொளி மணிமுடி அமரர் வேந்தனே.

17. உன்னுழை வேண்டுவ தொன்றுண் டாங்கது
பின்னர் யாம் கூறுதும் என்று பெட்புறும்

பொன்னகர்க் கிறையவ னிருந்த போதினில்
மன்னவன் அவரடி வணங்கி னனரோ.

### நளன் சிந்தனை

18 உண் ணெகிழ்ந் திறைஞ்சிய உலங்கொள்தோளினன்
விண்ணுல காள்பவர்க் கரியமேம் பொருள்
மண்ணுல காள்பவர் மாட்டு வைகுமோ
எண்ணின்மற் றிவருளம் யாவ தாங் கொலோ.

19. குறிப்பறிந் தீதலே கொடை மற்றின்றென
மறுத்தலே கேட்டபின் வழங்க லாதலின்
பெறற்கரும் ஆவியும் பெட்பின் ஈகுவன்
திறப்பட இவருளம் தெரிந்த தில்லையால்.

20 ஒளி முக மிழப்பவந் துற்ற நாணமீக்
கிளர்தர இல்லெனக் கிளக்கு மூர்ச்சனை
தெளிதர முகத்தினில் தெளித்தற் கன்று கொல்
நளி புனல் பொருளொடு நல்கு கின்றதே.

21. ஐந்தரு நீழலின் அரசு வைகிய
இந்திரன் முதலினோர் ஈகென் றென்னுழை
வந்துயர் பெரும்புகழ் வழங்கி னரிவர்
சிந்தனை மகிழ்வுற என் கொல் செய்வதே

22. உரவு நீர்க் கருங்கடல் உடுத்த மாநிலத்(து)
அருளுடன் இம்மையி னளித்த வான் பொருள்
மருவிய மறுமையில் வழங்கு பான்மைபால்
இரவலர் தமரினும் இனிய ராவரே.

23. உடைப் பெரும் பொருளினை உலகில் ஊதியம்
கிடைப்பதற் களித்தலிற் கிளர் நிரப்பினல்
அடுத்துவந் தேற்குனர்க் கார்வ மீதுறக்
கொடுக்கிலொன் றேபல கோடி யாகு மால்.

[நளன் சொல்லுதல்]

24. என்றுமற் றினையன எண்ணி வண்ணவான்
குன்றெனப் பணைத்துயர் குவவுத் தோளினான்
வன்றிறல் வாசவன் வதன நோக்கிமற்(று)
ஒன்று நீ கேட்டி யென் றுரைத்தல் மேயினான்.

25. என்னருந் தவத்தினன் றெனது தொல்குல
முன்னையோர் அருந்தவம் முயன்ற பான்மையால்
பொன்னகர் துறந்துநீர் போதப் பெற்றனன்
சொன்னவை மறுக்கிலன் சொல்க என்றனன்.

[நளனுக்கு இந்திரன் சொல்லுதல்].

26. ஆங்கது கேட்டவான் அரசன் பொற்பினால்
வீங்குதோள் மாரனை வென்ற நீயலால்
யாங்குள ரவன்றொடுத் தெய்யு மின்னறுப்
பூங்கணை யால்வருந் துயரம் போக்குவார்?

27. வெயில்விரி மணிமுடி வீமன் நல்கிய
மயிலியல் மதர்விழி வளைக்கை மங்கைபால்
செயிரறு தூதுநீ செல்ல வேண்டுமென்(று)
உயிரிரப் போரினும் உளையக் கூறினான்.

நளன் வருத்தப்படல்.

29. திருத்தகு செவியிடைச் சிவையி னூடுற
உருக்கிய செம்பினை ஊற்றினா லென
மருத்துவன் தீமொழி கேட்டு மன்னர்கோன்
கருத்தழிந் தாருயிர் கலங்கி னானரோ.

29. குருமணி மேகலைக் குவளைக் கண்கொலோ
பொருமதன் பகழியோ பொய்மை தீதெனும்
தருமமோ உயிர்நிலை தளர்ந்து வாடுமென்
மருமமீ தூன்றிய வாளிற் போழ்வதே.

30. என்னும் விள் ளாதயர்ந் திருக்கு மேமுறும்
தன்னையு மறக்குமெய்த் தரும நன்றெனப்
புன்னகை கோட்டுமெய் புழுங்கும் வெய்துயிர்த்து
அன்னமுன் உரைத்தவை அனைத்தும் எண்ணுமால்.

31. முற்றிழை வனமுலை முயங்கு நன்னலம்
பெற்றில னெனினும்வேள் பெய்யும் வாளியால்
மற்றுயிர் இறப்பினும் வான வேந்தொடு
சொற்றது மறுக்கில னென்று சொல்லுவான்.

தூதுபோகச் சொல்லிய இந்திரனைக்குறித்து நளன் சொல்லல்

32. எப்பொரு ளாயினும் யாவர் உள்ளமும்
கைப்படு நெல்லியங் கனியிற் காணுநீர்
துப்பிதழ் மடந்தைபால் தூது போகெனச்
செப்பிய தெவன்கொலென் சிந்தையோர்ந்துமே.

[நீயே செல் என்ற இந்திரனுக்கு நளன் சொல்லல்]

33. வழங்கிய நும்முரை மறுது சென்றியான்
மொழிந்தன னாயினு முன்னரேயெனை
விழைந்த அத் தளிரியல் வெள்குறு துளம்
குழைந்துநும் பால்மணம் பொருந்தல் கூடுமோ.

[என்னால் முற்றுமோ என்ற நளனுக்கு இந்திரன்
சொல்லியது]

34. என்னவேந் துரைத்தலும் இசைந்த சொல்மரு
நின்னை மெய்ப் பரதனை நிகரில் பார்த்தனை
முன்னினு நினைத்தவை அனைத்து முற்றுமால்
அன்னநீ யேகிலே தரிய தாகுமே.

[நளன் தூது செல்லச் சம்மதித்தல்]

35. இனையன வாசவன் இயம்பு மெல்லையின்
வனைமலர்க் கோதைதன் வயத்த னாகியும்
தனியறம் இழுக்குறாத் தகைய னாதலின்
அனையதற் கியைந்தனன் அலங்கல் வேலினான்.

[நீ செல்லத் தடையுளதோ என்ற இந்திரனுக்கு நளன் சொல்லியது]

36. பொருந்திய மன்னர் கோன் பொம்மல் வெம்முலைத்
திருந்திழை கடி நகர்ச் சேம மாகிய
அருந்திறல் வாயிலோர் அறிவுறு து போய்
வருந்திறன் யாதென மறித்துங் கூறினன்.

[மறைந்து செல்வதற்கு உபாயமுளதோ என்ற நளனுக்கு இந்திரன் அருளியது]

37. விட்புலந் தனிப்புரந் தருளும் வேந்தர்கோன்
நட்பொடும் இனியன நவின்றி யாவர்க்கும்
கட்புல னல்உருக் காண்கி லாததோர்
நுட்பநூல் விஞ்சையை நுவன்றிட்டானரோ.

38. பெறலரும் விஞ்சையும் பெற்று வானவர்க்கு
இறையவன் இணையடி இறைஞ்சி வண்டிமிர்
நறைமலர்க் கூந்தலாள் நகரி நண்ணுவான்
அறைகழல் இலங்கு தாள் அரசன் ஏகினன்.

[நளன் குண்டினபுரத்துக்குச் செல்லுதல்]

39. பண்ணமை கூந்தல் மான் தேரிற் பார்புகழ்
அண்ணலும் இமையவர் ஆர்வம் பின்செல
மண்ணிடை வானவர் மகளிர் தம்மொடும்
விண்ணிழிந் திருந்தன நகா மேயினன்.

40. வாம்பரித் தேரினின் றிழிந்து வண்டுரை
தேம்பொதி நறுமலர்த் தெரியல் மார்பினன்
காம்புறழ் தோளினள் செவ்வி காண்குறும்
எம்பலிற் கோநகர் எய்தி னனரோ.

[நளன் செல்லுகையில் நிகழ்ந்தவை]

41. உருகுதங் கொழுனர்பால் ஊடி நீத்தநல்
விரைகமழ் தெரியலும் மின்செய் ஆரமும்

குருமணிக் கலன்களுங் குலவு வீதிவாய்
எரிமணிப் பூணினன் இடறி யேகினன்.

42. மனங்கவர் வனப்பமை வடிவி னன்றியுங்
கனம்பயில் வாயிலோர் காண்குறு வகை
சினங்கொள்கூ ரிலையவேற் செம்மல் போதலால்
அனங்கனென் றுரைப்பதற் கையமில்லையே.

43. கண்ணகல் மணிக்கடைக் காவலாளர்தாம்
நண்ணினர் எவரென எவரை நாடினும்
தண்ணறுந் தெரியலான் தன்னை யாமென
எண்ணிவெம் மடங்கலில் எருத்தங் கோட்டுமால்

44. மலர்பயில் வாவிதோய் மாதர் நுண்டுகில்
அலைபுனல் நனைதலும் அல்குல் தோன்றலாற்
கலைவலான் கண்முகிழ்த் தேகக் காண்குறுன்
முலைமுக டழுந்துற ஒருத்தி முட்டினள்.

45. காமுறும் ஒருத்திதன் வதனங் கண்டகண்
கோமகன் முகிழ்த்தலால் கோதை மார்முகம்
மாமதி யென்பதும் மன்னன் செய்யகண்
தாமரை யென்பதும் தக்க ஆயவே.

46. செய்யகண் முகிழ்த்திடல் விழித்தல் தீதென
ஐயனுங் கடைக்கணால் நோக்க அன்பிதென்று
எய்யும்வேள் கணைமல ரிதய மோர்ந்துமால்
பொய்யென அருச்சனை புரிதல் போன்றதே.

47. தெரிவையென் றுருவெளி யோடு செப்பிய
அரசன துரைஅச ரீரி யாமென
வெருவிய மாதர் சொற் கேட்டு வெள்குறு
உருவெளி யிதுவென வுள்ளந் தேறினர்

48 விழைவெனும் பாகெறிந் தமரர் விஞ்சையாம்
தழைமுகப் படாத்தமை தறுகண் வாரணம்

கழைமத னியற்றிய கருங்கண் மங்கையர்
அழகெனும் படுகுழி ஆழ்ந்த தில்லையால்.

49. அங்கலுழ் மேனிய அணங்கை நாடொறும்
எங்கணுங் காண்குறு மயக்கம் ஏனைய
பங்கய வாண்முகப் பாவை மாரையம்
மங்கையென் றெண்ணுறு மயக்கந்தீர்த்ததே.

50. கணங்குழை முகத்தியர் கதிர்த்து விம்மிய
சுணங்கவிர் இளமுலைச் சுவடு தாக்கியும்
அணிந்தகுங் குமமெழி லகல மூழ்கியும்
மணந்தனர் போன்றனன் மன்ன ரேறனன்.

51. விளங்கிழை யொருத்திபே ரணியில் வேந்தெழில்
துளங்கலும் அதிசயந் தோன்ற நோக்கினள்
வளங்கெழு புகழினன் மறையக் காண்கிலான்
உளம்புகுந் தொளித்ததவ் வுருவென் றெண்ணினள்.

52. வாட்டிறன் மன்னவன் வனிதை பேரெழில்
தீட்டியொன் கதிருமிழ் செய்ய வார்வடம்
சூட்டினன் அகலவிவ் வுருவு தோன்றயார்
கோட்டினரெனச்சிலர் குறிப்பி னுடுவார்.

53. பூந்துகள் செறிந்தகோ மறுகிற் போகிய
வேந்தர் தாள்அழுந்துமவ் விடங்கள் நோக்குரு
மாந்தளிர் மேனியர் வையங் காவல்செய்
வேந்தர்தாள் இலக்கண மேய தென்னென்பார்.

54. கள்ளவிழ் கோதையர் எறிந்த கந்துகம்
வள்ளல்மார் புற்றெதிர் மறிந்துவீழ்தலும்
தள்ளரும் அதிசய மெய்தித் தக்கமில்
வெள்ளிடைப் பட்டிவன் மீண்ட தென்னென்பார்.

55. எதிர்முக மாயிருந் திருவர் பைந்துணர்ப்
புதுமலர் தொடுத்தலும் நடுவண் புக்கவன்

2757



கதுமென ஏகலு மறைப்பக் கன்னியர்
மதிமயக் குறமுக மறைத்த தென்னென்பார்.

56. அண்ணறன் மார்பகத் தணிந்த பேரணி
மண்ணிய மணிவயின் வடிவு தோன்றலும்
கண்ணுற நோக்குவாள் கன்னிமா ரொடும்
விண்ணிடை யெனதுரு விளங்கல் என்னென்பாள்.

57. வெற்பின தெழில்கெட விளங்குதோளினன்
பொற்பொளிர் பித்திகைப் புறத்திற் றோன்றலும்
அற்புதம் இதுவென நோக்கி அன்பினற்
கற்புடை மகளிரும் நிலை கலங்கினர்.

58. இழைவளர் முலையினர் ஒருவன் ஏர்பெறு
நிழலிவண் நோக்கின னெனவு நீளிடை
மொழிவன கேட்டனன் எனவு மொய்ம்புறத்
தழுவின னென்னவுந் தம்மிற் கூறுவார்.

[வழியில்கண்ட தமயந்தியோடு நளனுக்குண்டாகிய செய்கை]

59. இன்னிசை அளிபயில் பொழிலின் ஏந்தல் முன்
பொன்னவிர் முலைத் தமயந்தி போதலும்
அன்னமுன் கூறிய அற்றைநாள் முதல்
முன்னுறு முருவென முன்னி னைரோ.

60. மடவரல் உருவெளி மன்னன் தோள்மிசை
யிடையறு விழைவுட னென்றுஞ் சூட்டல் போல்
மிடைமலர்ப் பூந்தொடை சூட்டமேவிய
சுடரிலை வேலினன் தோளில் வீழ்ந்ததே.

61. உருவெளி யாகயான் கண்ட ஒண்ணுதல்
மருமலர் மாலிகை வனைந்த தென்னென
அரசனும் எண்ணினன் அவளும் சூட்டிய
தெரியல்காண் கிலனெனத் தெருமந் தாளரோ.

62. முருகவிழ் குழலினாள் தனையு முன்னூறும்
உருவெளி யென இறை உவந்து புல்லினன்
அரிவையும் அன்னவா றெண்ணி யாங்கெதிர்
புரவலன் மார்புறப் புல்லி னளரோ.

63. சொல்லரும் இன்பமீ தூரத் தோன்றலும்
புல்லுவிட் டவ்வுருப் பொலிவு நோக்கினன்
மெல்லியல் அவ்வுரு விழியிற் காண்குறு (து)
அல்லலுற்(று) அணி வளை அங்கை நீங்கினள்.

[இருவர் செய்கையும் வெவ்வேறு சொல்லல்.]

64. பொன்னடிப் பூஞ்சிலம் பொலிப்ப மேகலை
இன்னரிக் கிண்கிணி இகலி ஆர்ப்பெழ
மின்னடை கற்பது போன்று மெல்லெனத்
தன்னமர் கோயிலுள் தையல் எய்தினள்.

65. கருந்தடங் கண்ணியைக் கையிற் புல்லியும்
பொருந்திய உருவெளி யென்று போக்கி நல்
அருந்தனம் பெற்றிழந் தாரில் ஐயனும்
வருந்திவெந் துயரொடு மதி மயங்கினன்.

நளன் கன்னிமாடத் தடைதல்.

66. பாணிகர் வண்டினம் பாடுஞ் சோலையும்
சேணுற நிவந்தசெய் குன்றுந் தேடியும்
காணல னாகிய களிநல் யானையான்
மாணிழை உறைதரு மாடம் எய்தினன்.

தமயந்தி காட்சி

67. மின்னிடை அரம்பையர் குழாத்துள் மேவிய
அன்ன மென் னடை அயி ராணி யாமென
நன்னுதல் மடந்தையர் நாப்பண் இன்னகைக்
கன்னிவீற் றிருத்தல்கண் களிப்ப நோக்கினன்.

நளன் ஐயுறல்.

68. மண்டமர் கடந்தவேல் நளன் வந் தானெனத்
தொண்டை வாய் மடந்தையர் நாளுஞ் சொல்வன
பண்டரு மொழிக்கிளி பயின்று கூறலும்
கண்டதோ இஃதெனக் காளை எண்ணினன்.

நளன் மகிழ்ச்சி அடைதல்.

69. ஒருத்தியான் நளனென இருப்ப உள்ளுறும்
விருப்பினல் ஒருத்தியான் வீமன் மாதென
மருக்கமழ் பூந்தொடை சூட்ட மன்னவன்
பொருப்புறழ் தடம்புயம் புளகம் பூத்தவே.

70. மலர்ந்த செந் தாழைமென் மடலின் மேற்றனக்(கு)
இலங்கிழை உகிரினல் எழுது பாசுரம்
நலம்பெறக் காண்டலு(ம்) நண்ண லார்புகழ்
உலம்பொரும் தோளினன் உவகை எய்தினன்.

நளன் நிழல் வடிவால் மாதர் மனம் பேதியாமை.

71. செழுமணிப் பித்திகைத் தலத்தில் தீதறு
மழவிடை அனையவன் வடிவம் தோன்றலும்
கழையமை தோளினர் காளை பேரெழில்
எழுதிய உருவிலொன் றென்ன எண்ணினர்.

அழகினல் தமயந்தி தன்னைத் தெரித்தல்.

72. நாமவேல் வலனுயர் நளனுக் காங்கமர்
வாமமே கலையினர் நடுவண் வைகுவாள்
தாமமார் குழல் தம யந்தி யென்றவள்
காமரு பேரெழில் காட்டு கின்றதே.

கவிக்கூற்று.

73. ஏதமில் குணத்தினன் இனைய னுகநண்
தாதவிழ் பூங்குழல் தையல் பால் தம(து)
ஆதரம் பெருகிய அமரர் ஏவிய
தூதியர் செய்திறம் சொல்லு வாமரோ.

[இந்திரன் முதலிய நால்வரால் ஏவப்பட்ட தூதிகள் தமயந்தியோடு பேசி மீளுதல்]

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

74. கானமர் அலங்கல் மாலைக் கடவுளர் விடுப்ப வந்த
பானலங் கடந்த தீஞ்சொற் பணைமுலைப் பாவை நல்லார்
ஊனொடு பழகிநெய்த்தோர் உமிழ்ந்துவெம்புலவு நாறும்
மானவேல் வீமன் ஈன்ற வனிதையை இனிதுகண்டார்.

75. பொருவரு வனப்பின் மிக்க புலோமசை முதல்வராய
வரிவிழிக் குமுதச் செவ்வாய் வானவர் மகளிர்தாம்இத்
தெரியிழை செவ்வி நோக்கில் சேணிடைப் பொலிந்து [தோன்றும்
இரவிமுன் மதியமாவர் எனஉளத் தெண்ணினூரால்.

76. எய்திய மகளிர் தம்மில் இமையவர் தலைவன் தூதி
ஐயரி நெடுங்கட் செவ்வாய் அணங்கிற்கும் அணங்கு போல்வாய்
கொய்துணர்த் தருவின்நீழற் கோமகன் பணியாற் [போந்த
செய்திநீ கேட்டியென்று சீரடி வணங்கிச் சொல்வாள்.

77. இருவிசும் பொருகோ லோச்சி யேதிலர்க் கடந்து [தேவர்
பரவிநின் றிறைஞ்ச நாளும் பனிமலர்த் தருவின் நீழல்
அரியணைப் புறத்து வைகும் அண்ணலுக் கமர்த மன் [னாய்
உருவிலான் ஒருவன் செய்யும் உறு பகை காத்தல் வேண்டும்.

78. எம்மிறை இளவற் காக இருங்கடல் கடைந்து வாசச்
செம்மலர்த் திருவை ஈந்த தேவர்வா சவற்கு மின்னும்
கைம்மலர் வருந்த இக்குக் கடல் கடைந் துழலா வண் [ணம்
பொம்மல் வெம் முலையா யன்னேற் கின்னருள் புரி தல்வேண்டும்.

79. மாயிரு ஞாலந் தன்னில் மகம்பல இயற்றிப் பெற்ற
மீயுயர் பசும்பொன் நாட்டின் மேதகு செல்வ மெல்லாம்
மேயின நின்பா லன்றோ இமையவர்க் கிறைவன் பால்
[நின்
சேயரிக் கடைக்கண் நோக்கஞ் சிறிதருள் புரியின்
[மாதோ.

80. மண்ணினிற் சிறந்து வாழும் மன்பதைத் தொகுதி
[தன்னில்
எண்ணிடிற் சிறந்தாரன்றோ இயக்கர்? அவ் வியக்கர்
[தம்மில்
விண்ணவர் சிறந்தா ரன்றோ? விண்ணவர் தமையும்
[ஆளும்
அண்ணல்நின் ஏவல் கேட்பின் அதனினுஞ் சிறந்த
[துண்டோ?

81. தாதொடு நறவு தூற்றுந் தருநிழல் இனிது வைகும்
மேதகு நிதியும் ஆனும் வேட்டன உவந்து நல்க
ஏதமில் அரம்பை மாதர் முறைமுறை ஏவல்கேட்ப
நீதொழும் அமரர் யாரும் நிற்றொழப் பணித்தி யென்
[றுள்.

தமயந்தி இந்திரன் தூதிக்கு விடைகொடுத்தல்.

82. இனையன உரைத்தலோடும் யாவர்தம் உளமுந் தேரும்
பனியிரு விசும்பில் தேவர் பரவவீற் றிருக்கும் வேந்
[தென்
மனநிலை உணரான் போலும், மழைமதர் நெடுங்கண்
[நல்லாய்
உனைவிரைந் திங்ஙன் தூது விடுத்ததென் உரைத்தி
[யென்னா.

83. என்னுளத் தென்றும் நீங்கா திருப்பவன் நளனேயாகும்
பொன்னகர்க் கிறைவன் தன்பாற் பொருந்துதி யென்
[னுந் தூதுக்(கு)

அன்னவன் இயையுங் கொல்லோ எனஅறைந் தயலே
[நிற்கும்
மன்னவன் மகிழ்ச்சிகூர மடவரல் இனிது சொன்னாள்.

84. கோற்றொடி நளன்மே லுற்ற காதலைக் குறித்து
[நோக்கி
மாற்றுதல் அரிதென் றெண்ணி வாசவன் தூதி யேக
ஆற்றல்வா சவற்கு நேரா அணங்கெவர்க் கிசையுமென்
[னும்
தோற்றமோ டுரையார் மற்றைத் தேவர்தூ தியரும்
[போனார்.

நளன் தமயந்தியை நோக்கல்.

85. தூதியர் ஏகக் கண்ட தோன்றல் செங் கமலக் கண்கள்
மேதகு செல்வ மிக்க விதர்ப்பர் கோன் தவத்தில்
[தோன்றும்
மாதர்மென் னோக்கினாள்தன் வடிவினில் அழுந்திப்
[பின்னும்
ஆதரம் பெருகி இன்ப வாரியில் ஆழ்ந்த அன்றே.

86. பாசிழை பரந்த அல்குற் பனிமொழிக் குமுதச்
[செவ்வாய்
மாசறு மதிய மன்ன வாண்முகத் தணங்கை நோக்கி
ஆசையங் கடலுள் ஆழ்ந்த கரைபெறு அரசன்நோக்கம்
ஏசுவ தொன்று மில்லா முலைவரை இவர்ந்த அன்றே.

87. போர்க்களி றனைய வீமன் புரிந்தமெய்த் தவத்தில்
[தோன்றும்
கார்க்கருங் கூந்த லாள்மைக் கண்வலை யதனுட்
[பட்டோ,
ஈர்க்கிடை புகாத பொம்மல் இளமுலை நெருக்கிற்
[புக்கோ
பார்த்தசெங் கமலக் கண்கள் பறிப்பரி யனவாய் நின்ற.

88. விண்ணவர் மகளிர் யாரும் வெள்குற வனப்பு வாய்ந்து
பெண்ணலங் கனிய நின்ற பேதைபே ரழகு முற்றுங்

கண்ணொடு பிணித்தா லென்ன வியப்புறக் களித்து
[நோக்கும்
புண்ணுறு புலவு வேலான் உளத்தொடு புகலலுற்ருன்.

நளனது சிந்தனை

89. வடிவமை நூலிற் சொல்லும் வனப்பெலாம் அமைத்து
[வேதன்
கடிமலர்ச் செங்கை வண்ணம் காட்டிய உருவு
[கொல்லோ
அடுகணை வேனி லானின் அமுதுகோல் தேய்த்துத்
[தீட்டும்
படிவமோ உயிரை வாட்டும் பாவைதன் வடிவந்தானே.

90. குழையெதிர் நடந்து பைம்பொற் குமிழ்மிசை மறிந்து
[நீண்ட
உழைபொரு நெடுங்கணுள் தன் உறுப்பினுக் குவமை
[யாகச்
செழுமலர் முதலவாய பொருள்களைத் தெரிந்து கூறின்
அழகினுக் குவமை தீர்ந்த அவற்றினுக் கிகழ்ச்சியாமே.

91. உடைந்துவண் டிமிருஞ் செய்ய கொழுமலர்த் திருவி
[ஞேடுந்
தடஞ்சினை பொதுளும் மென்பூந் தருநிழல் உறையும்
[தெய்வ
மடந்தையர் தம்மை யெல்லாம் வைகலும் படைத்துச்
[செங்கை
படிந்தபின் இந்த மாதைப் படைத்தனன் கமலத்
[தோனே.

92. விரிந்தசெங் கமலத் தண்பூம் பொகுட்டில் வீற்றிருக்
[கும் மேலோன்
பொருந்திள முறுவல் செவ்வாய் முகிழ்முலைக் கரிய
[கூந்தல்

திருந்திழை அழகு வாய்ந்த திருமுகத் திங்களாகப்
புரிந்தனன் களங்க மன்றே புருவமாய் இயற்றினனே.

93. மணிமுடி யதனைக்கொம்மை முலையென அமைத்து
[மாரன்
அணிமலர்க் கணைகள் ஐந்தில் ஆன்றமூ வுலகு மூன்று
கணைகளால் வென்று மற்றைக் கணைகளுக் கெதிரில்
[லாமை
இணைவிழி யென்று பேரிட் டிவள் முகத் திருத்தினனே.

94. வெதிர்புரை பசிய மென்றோள் வேல்நெடுங் கண்ணி
[னாள்தன்
திதலைவெம் முலைபோல் முத் தந் தெரிதர அணிந்தி
[டாமல்
மதமழை கொழிக்கும் வேழ மருப்பினை வெருவி
[யன்றே
கதிர்மணி முத்த முள்ளே கரந்துவைத் திருக்கு மாறே.

95. மடலவிழ் கமலப் புத்தேள் வடிவினை அமைத்துவெய்ய
தடமுலை அமைப்ப மாதின் உறுப்பலால் தரமின்
[றென்று
இடையினுக் கமைத்த கூற்றை எடுத்தெடுத் தமைத்த
[லாலோ
கொடியெனத் தேய்ந்து தேய்ந்து குறைந்தது மருங்
[குல் தானே.

96. மெளவலங் தெரியல் வேய்ந்து மணங்கமிழ் கரியகூந்தல்
கொவ்வையங் கனிவாய்ப் பேதை குவிமுலைக் களிநல்
[யானை
செவ்விதிற் பிணித்த நீலச் செழுமணி வல்லி போலும்
அவ்வயி ரணிந்த கோல அணிமயி ரொழுக்கந் தானே.

97. ஐங்கணைக் கிழவன் வைகும் அணியர சிருக்கைப்பாங்கர்
தங்குற அமைத்த வாழைத் தண்டு கொல் தறுகட்
[சீற்றத்

துங்கவெம் பருமயானைத் தடக்கைகொல் துணிதல்
[தேற்றும்
செங்கயற் கருங்கட் செவ்வாய்த் திருந்திழை குறங்கு
தாமே.

98. பைந்தருநீழல் வைகும் பாவையர் பதும பீடத்(து)
இந்திரைக் கணங்கு செய்யும் ஏந்திழை யெழிற்குத்
[தோற்று
வந்தடி பணியுந் தோறும் வாணுதல் கவினத் தீட்டும்
சிந்துரத் திலககந் தோய்ந்தோ சீரடி சிவந்த வாறே.

99. இன்னவா றுளத்தின் எண்ணி யெறுழ்வலி மடங்க
[லன்னான்
மின்னவிர் குலிச வேந்தன் விஞ்சையின் புணர்ப்பின்
[நீங்கிப்
பொன்னவிர் சுணங்கு பூத்த பொம்மல்வெம் முலையி
[னுள்முன்
கன்னலஞ் சிலைவே ளென்னக் கட்புலன் கதுவ நின்றான்.

100. விரைகமழ் நறிய தண்டார் விகர்ப்பர்கோன் அளித்த
[பாவை
அரசிளங் குமரன் தன்னை ஆர்வமோ டினிதுகண்டாள்
உருவெளி கண்டு நாளும் உவந்துளம் அயர்வாள்
[முன்னம்
தெருளுறக் காணிலெய்தும் உவகையார் தெரிக் கற்
[பாலார்?

101. அங்கண்மா ஞாலங் காக்கும் அண்ணல்மேல் அணங்க
[னுள் தன்
செங்கயற் கருங்கண் வாளி சிறிதுசென் றழுந்தா
[முன்னம்
பைங்கழை தாங்கி ஆர்வம் பரித்திடம் பார்த்து நின்ற
துங்கவேள் விடுத்த வாளி தூதன்மாட் டாழ்ந்தவன்றே.

102. கழிபெருங் காத லாள்கட் கருவிளை மலர்கள் வெய்ய
மழவிடை யனையான் செய்ய மணிப்புய வரையிற் பூத்த.

விழைவொடு மகிழ்ச்சி கூரும் வேனில்வே ளனையான்
[செங்கண்
முழுநெறிக் கமல மன்னாள் முலைத்தடத் தலர்ந்த
[மாதோ.

103. படவர வல்குற் செவ்வாய்ப் பனிமொழிக் கொடியன்
[னாளை
மடலவிழ் கமலப் போதின் மடந்தையென் பதற்கு
[வெற்றிக்
கடகளி றென்ன நின்ற காமரு காளை தன்னை
இடையறா தினிது நோக்கி இமைப்புறு குறையுந்
[தீர்ந்தாள்.

104. உண்ணிறை உடைய காமம் உருவெடுத் தென்ன நின்ற
அண்ணலும் அனங்கன் னாளும் அழகெனும் இனிய
[தேறல்
எண்ணருங் காதல் கூர இனிதினின் மாறி மாறிக்
கண்ணினாற் பருகி இன்பக் களிப்பெனுங் கடலுள்
[ஆழ்ந்தார்.

105. இருதடம் புயமு மந்தா ரகலமு மியைந்த தாலென்
தெரிவரும் ஆவி யென்றாள் தெரிவையும் அண்ணல்
[தானும்
முருகவிழ் குழலும் வெய்ய முகிழ்முலைத் துணையுந்
[தாங்கும்
உருவுடைத் தாங்கொ லென்றன் உயிரென வியந்து
[நின்றான்.

106. மாதுபால் விழைவி னேகும் மனத்தினை யல்லசெய்தல்
தாதினுக் கியல்பன் றென்னாத் தோன்றல்பே றறிவின்
[மீட்பக்
காதலின் அவன்பாற் செல்லுங் கருத்தினைக் கமலத்
[தண்பூம்
போதுறை மடந்தை அன்னாள் பொருந்துநாண் தடுத்த
[தன்றே.

[நளனைக் கண்ட தமயந்தியும் தோழிமார்களும் சிந்தித்தல்]

107. நாணமீ தூர நின்ற நகைமதி முகத்தி னாளும்
பூணினுக் கழகு செய்யும் புணர்முலைத் தோழிமாரும்
நீணகர்க் கடிகொள் வாயில் நீங்கிவந் தருகு நின்றான்
சேணுறை அமரன் கொல்லோ திருந்தெழில் இயக்க
[னேயோ.

108. கடிகமழ் கமலச் செல்வி கண்கவர் வனப்பு வாய்ந்த
வடிவுறு குவவுத் திண்டோள் வண்டுழாய் மாயன்
[கொல்லோ
மிடல்கெழு வெள்ளி வெற்பின் விஞ்சையர்க் கிறை
[வன் கொல்லோ
முடியுடை அமரர் போற்றும் மொய்கழற் குமரன்
[கொல்லோ.

109. விரும்பிய அனைத்தும் நல்கும் மேதகு தவத்தின்
[மாய்ந்தோர்
திருந்தெழில் யாக்கை பெற்றுத் திகழ்வரென் றுரைக்கு
[நீரால்
கரும்புறழ் கிளவி பாகன் கட்டழற் பாய்ந்து துஞ்சி
அரும்பெறல்யாக்கை பெற்ற காமனோ அறிகிலேமால்.

110. மங்கையர் நிறையும் நாணும் கவர்ந்திட வனப்பு
[வாய்ந்த
இங்கிவன் தன்னை ஞாலம் இன்புறப் படைத்தி லா
[னேல்
திங்களங் கண்ணி வேய்ந்த செஞ்சடைக் கடவுள்
[எங்ஙன்
பைங்கழை மதனைக் கொன்ற படுபழி தீரு மாறே.

111. மாயிரு ஞாலத் தானேல் மண்ணினிற் பொலிந்த தில்லை
மீயுயர் விசும்பு ளானேல் விசும்பினிற் சிறந்த துண்டோ
பாயொளி பரிதி வேலான் பாதலத் துள்ளா னாயின்
மேயகீ ழுலகே யெல்லா உலகினும் மேல தாமால்.

112. யாவனோ இவனென் றெண்ணி இருநிலத் திலங்கு
[பைம்பொற்
சேவடி பொருந்து நீரால்தேவரில் ஒருவன் அல்லன்
தூவியஞ் சிறைய அன்னஞ் சொல்லிய வனப்பு வாய்ந்த
காவல னுங்கொ லென்னக் கருதியொன் றுரைக்க
[லுற்றாள்.

113. கலைநிலாத் தவழு மாடக் கடிநகர் கடந்து போந்த
சிலை வலாய் நீயிங் கெய்தச் சிறப்புடைப்புவனந்தம்மில்
பொலிவிழந் திருந்த தெந்தப் புவனம்? நீ பொருளதாக
நலனுறு புனித மாய தெப்பெயர் நவிற்று கென்றாள்.

## நளன் பேசுதல்

114. கானமர் கரிய கூந்தற் கன்னியர் இவ்வா றோதத்
தேனிமிர் தெரியல் வேய்ந்து சிலைத்தழும் பிருந்த
[தோளான்
பானலங் கடந்த தீஞ்சொற் பைந்தொடி வதுவை
[வேட்டு
வானவர் விடுத்த தூதன் யானென வழங்க லுற்றான்.

115. ஐந்தரு நீழல் வேந்தன், ஆர்கலிக்கிறைவன், வெய்ய
செந்தழற் கடவுள், தென்பாற் றிசையுறை தருமன்
[இன்னோர்
பைந்தொடி நின்னை வேட்டுப் படைமதன் பகழி பாயச்
சிந்தனை பிறிதாய் மாழ்கித் தெருமரல் எய்து கின்றார்.

116. இங்கிவர் தம்மை ஆசைக் கிறைவரென் றறைவ
[தெல்லாம்
தங்கிய திசையின் பேரால் சாற்றிய மாற்ற மன்றே
கொங்கவிழ் குழையில் தாவிக் குமிழ்மிசை மறியும்
[வேற்கண்
அங்கனும் மேனி யாய்நின் ஆசையால் வந்த தாமால்.

[இந்திரனது வருத்தம்]

117. பற்றிய காமத் தீயால் பைம்பொனுட் டமரர்க்கெல்லாம்
கொற்றவன் வருந்தா வண்ணம் கொய்துகொய்
[தணையிற் சேர்த்தே
உற்றவர் வறுமை தீர்க்கும் உயர்சினைத் தருக்களைந்தும்
நற்றளி ரின்மை யாகி நல்குர வடைந்த மாதோ.

[மற்ற மூவர் வருத்தம்]

118. கடிமலர்க் கூந்தல் நின்மேற் காதல்மீ தூர நின்ற
அடுதொழிற்கூற்றும் அஞ்ச அடர் கின்றான் அனங்கன்
[வெய்ய
வடவையோ டிகலு முந்நீர்க் கிறையையும் வருத்தி
[யாவுஞ்
சுடுதழற் கடவுள் மீதும் சுட்டது காமத் தீயே.

119. முருக்கிதழ் அணங்க னய்நின் முகிழ்முலை வேட்ட
[ஞான்றே
செருக்கிளர் அனங்கன் வாளிச் செழுமலர் வருத்த
[வாடி
இருத்தலாற் பழிச்சு கின்றோர் ஏடவிழ் நறியபோதால்
அருச்சனை புரியுந் தோறும் அஞ்சுவர் அமரர் மாதோ.

120. இன்னணந் தேவர் மாழாந் திருநில வரைப்பிற்
[போந்துன்
பொன்னவிர் திதலைபார்ந்த புணர்முலைப் போகம் வேட்ப
முன்னம்ளத் தவஞ் செய்தாய் கொல் இயைவதே
[முறைமை யென்றான்
கன்னல்வில் ஒளித்து நின்ற காமனே அனைய நீரான்.

121. என்றிவன் மொழித லோடும் இனையனே நளனென்
[றெண்ணி
மன்றலங் குழலாள் நாணி வருத்தமோ டெருத்தங்
[கோட்டி

நின்றனள் மருங்கு சூழ்ந்த தோழியர் நிடதங் காக்கும்
வென்றிகொள் சுடர்வேல் வேந்தற் கெதிர்மொழி
[விளம்ப லுற்றார்.

[தாதியர் விடைகொடுத்தல்]

122. ஆற்றல்சால் நளனே யன்றி ஆருயிர் பிறிதின்றென்னும்
வேற்றடங் கண்ணினாள்தன் மெய்ப்பதைத் தாவி சோரச்
சாற்றிய மாற்றந் தன்னால் தழலுமிழ் தறுகட் பேழ்
[வாய்க்
கூற்றுவன் தூத னென்று கூறிய தியற்கை யாமே.

123. வையகம் ஒருகோ லோச்சி வான்புகழ் நிடதங் காக்கும்
ஐயனை மணப்ப தன்றி அரிமதர் நெடுங்கட் செவ்வாய்த்
தையல்வே றொருவர் நாமஞ் சாற்றினும் ஆற்றா ளாகி
வெய்ய செந்தழலின் மூழ்கி விளிவதற் கைய மின்றே.

[நளன் தமயந்தியை வற்புறுத்தல்]

124. என்றவர் மொழிய வேந்தன் இயப்புவான் எரியின்
[வீழ்ந்து
பொன்றில்வெங் கனலி தன்னைப் புணர்ந்ததாம், புகன்ற
[செந்தீ
அன்றிவார் புனலில்வீழ்ந்துள் ஆருயிர் விடுத்தா
[ளேனும்
துன்றுசீர் வருணன் தன்னைத் தோய்ந்ததாய் விளையு
[மன்றே.

125. அன்றியும் கனலி சான்று யல்லது வதுவை யாற்றற்(கு)
ஒன்றுமோ வருணன் ஒவ்வா துதகமோ டளிக்குந்தூய
மன்றலெவ்வாறு முற்றும் வானவர் அருளில்லாமல்
துன்றுநீர்ப் புவியில் யார்க்குஞ் சூழ்வினை முடிக்க
[லாமோ.

126. வேயினைப் பழித்த மென்தோள் வேற்றடங் கண்ணி
[னாள் தன்
எயபே ரழகு மாந்தர் இரு கணால் நோக்க வற்றோ

தீயுமிழ் வயிரவொள்வாள் ஏந்திய தேவர் கோமான்
ஆயிரங் கண்க ளாலும் நோக்குதற் கமைந்த தன்றே.

127. வெந்திறற் களிநல் யானை விதர்ப்பர்கோன் அளித்த [மாதைத்
தந்துயிரளித்தி யென்னத் தனியிரு விசும்பு காக்கும்
இந்திரன் கேட்ட போதில் எண்ணிய அனைத்தும் நல் [கும்
ஐந்தரு வழங்கில் நும்மால் அன்றென மறுக்க லாமோ.

[தமயந்தி வருந்தல்.]

128. என்றிவன் புகன்ற மாற்றம் இருசெவி வெதுப்பக் [கேட்டு
நின்றுளம் பதைப்ப வாடி நெட்டுயிர்ப்போடுஞ் சோரும்
மன்றலங் குழலினள் தன் மதர்நெடுங் கயற்க ணுலி
குன்றெனப் பணைத்து வீங்கும் குவிமுலை வார்ந்த [அன்றே.

129. மாதுகண் பனிப்ப நோக்கித் தோழியர் மாழாந் துள் [ளம்
பேதுற வெய்தி நின்ற பெய்வளைத் துயர மெல்லாம்
தூதுநாம் விடுத்த அன்னம் சொல்லிய தென்னிற் [சற்றும்
ஆதர மின்றி இவ்வா றுரைக்குமோ அரசன் என்றார்.

[அன்னத்தின் வரவு]

130. இன்னணம் அணங்க னளும் ஆயமு மிரங்கல் நோக்கி
மன்னனும் அறிவு தீர்ந்து மனஞ் சிறி தயரும் வேலை
பொன்னிறப் பவளச் செவ்வாய்ப் பொற்புறு பசிய [மென்சூட்(டு)
அன்னமும் விசும்பி னீங்கி அவ்வுழி யடைந்த தன்றே.

131. எய்திய தூவி யன்னம் இன்னகைப் பவளச் செவ்வாய்
மையவாங் கரியகூந்தல் வாண்முகம் இனிது நோக்கி

நெய்தவழ் புலவு வைவேல் நிடதர்கோன் இவனே உள்
ளத்(து)
ஐயுறேல் கமலப் போதில் அணங்கிற்கும் அணங்கு
[போல்வாய்

132. மழைமதர் நெடுங்கட் செவ்வாய் வளர்முலை மடந்
[தாய் நின்மேல்
விழைவிகந் துரைத்தா னல்லன், விண்ணவர்க் கியைந்த
[மாற்றம்
பழுதுறு மென்னு மாற்ருற் பகர்ந்தனன் பரிதி வேலான்
அழுதகங் குழைந்தி டேலென் றன்பினுல் அறைந்த
[தன்றே.

133. வடுவகி ரனைய உண்கண் மடந்தையோ டிவ்வா றேதிக்
கடகளி றென்ன நின்ற காளை தன் முகத்தை நோக்கா
உடையபே ரறிவாற் காமம் உள்ளமைத் தின்ன கூறில்
கொடிநெடுந் தானை வேந்தே கோற்றொடி யாற்றுங்
[கொல்லோ.

134. மாங்குயிற் குதலைப் பேதை மனமும் நீ இசைந்த வண்
[ணம்
தீங்கற உரைத்த வாறும் தேவர்மற் றுரைரா நல்லர்
ஈங்கினி உரைத்த தென்னை இவ்வயின் நிகழ்ந்த வெல்
[லாம்
ஆங்கவர் தம்பால் ஏகி அறைதி யென் றறைந்த தன்
[னம்

[நளன் திரும்பல்.]

135. அவ்வுரை கேட்ட லோடும் அடையலர்ச் செருக்கும்
[வேலான்
மவ்வலங் குழலி ஞள்தன் மனவலி இனிதி னோர்ந்து
செவ்விதின் மனமும் கண்ணும் தெரிவைமேற் கிடப்ப
[மாருக்
கவ்வை கொள் வாயி னீங்கி விஞ்சையிற் கரந்து போ
[ஞன்.

[நளன் தேவர்களுக்கு நிகழ்ந்தவை கூறல்.]

136. காரிகை உளமும் நாணும் கவர்ந்தனன் கரந்து போய
மூரிவெஞ் சிலைக்கை வீரன் கடவுளர் முன்னர்ஏகி
நேரிழை தன்பாற் றூது போயபின் நிகழ்ந்த வெல்லாம்
சோர்வுறு துரைத்தான், தேவர் தோன்றல்பால் மகிழ்
[ச்சி கூர்ந்தார்.

நளன் தூது முற்றிற்று.

---

